# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சாதாரண — யுதவு பரிமள மதுகர வெகுவித — ஐப்பசி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

## டெலிபோன் எண் மாற்றம்

நமது காரியாலய டெலிபோன் எண் 19 - 10 - 70 முதல்

**2 0 2 7 8** என்று

மாறியுள்ளது. அன்பர்கள் கவனித்துக் கொள்ள வேண்டுகிறோம்

---

உ

முருகா

# இலக்ஷார்ச்சனை

காங்கேயநல்லூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தில் 30-10-70 வெள்ளிக்கிழமை முதல் 4-11-70 புதன்கிழமை வரையில்

**ஸ்கந்த ஷஷ்டி இலக்ஷார்ச்சனை**

திருமுருக கிருபானந்தவாரி சுவாமிகள் அவர்கள் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெறும்.

**அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 10.00**

விருப்பமுள்ள அன்பர்கள் நேரில் பணம் செலுத்திக் கலந்து கொண்டோ அல்லது பின்வரும் விலாசத்துக்குப் பணமனுப்பியோ அர்ச்சனையில் பங்கு கொள்ள வேண்டுகிறோம்.

நிர்வாக தர்மகர்த்தா,
ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்
காங்கேயநல்லூர் P. O.
(வழி) காட்பாடி நகர் விரிவு
(Katpadi Extension N.A. Dt.)

மணியார்டர் மூலம் பெற்றுக்
கொள்ளும் விலாசம்:
மானேஜர், திருப்புகழமிர்தம் ஆபீஸ்,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

## அன்பர்கள் கவனத்துக்கு

15-5-70 முதல் தபால் ரிஜிஸ்ட்ரேஷன் (பதிவுக் கட்டணம்) செலவு 0-75லிருந்து 0·95 ஆக உயர்ந்துள்ளது. புத்தகத்துக்குரிய விலை, தபாற் செலவு இவைகளுடன் மேற்கொண்டு 0·95 சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும். சில அன்பர்கள் புத்தகங்களின் விலையுடன் 0·95 மட்டும் சேர்த்து அனுப்பி வைக்கின்றனர் இது சரியல்ல. புத்தகத்தின் விலை+தபாற் செலவு+ரிஜிஸ்ட்ரேஷன் செலவு ஆக மூன்றையும் தெரிந்து சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும்.

**கைவசமில்லை**

பின்வரும் புத்தகங்கள் கைவசம் கிடையாது. ஆகவே அந்தப் புத்தகங்களை அனுப்பி வைக்குமாறு அன்பர்கள் யாரும் பணம் அனுப்பி வைக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுகின்றோம். மறு பதிப்பு அச்சானவுடன் திருப்புகழமிர்தம் மூலமே தெரியப்படுத்துவோம்.

1. கந்தரலங்காரம் (உரையுடன்)
2. கற்புக் கனிகள் முதற் புத்தகம் இரண்டாம் புத்தகம்
3. ஸ்ரீ சுப்ரமண்ய ஸஹஸ்ர நாமம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்

உ
ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றுள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 35 | சாதாரணஸூ—ஐப்பசி மீ<br>அக்டோபர் 1970 | இதழ் 7 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

சிவமா துடனே அநுபோ கமதாய்
சிவஞா னமுதே பசியாறித்
திகழ்வோ டிருவோ ரொருரு பமதாய்
திகைலோ கமெலா மநுபோகி
இவனே யெனமா லயனோ டமரோ
ரிளையோ னெனவே மறையோத
இறையோ னிடமாய் விளையா டுகவே
யியல்வே லுடன்மா அருள்வாயே
தவலோ கமெலா முறையோ வெனவே
தழல்வேல் கொடுபோ யசுராரைத்
தலைதூள் படஏழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே
கவர்பூ வடிவாள் குறமா துடன்மால்
கடஞ மெனவே அணைமார்பா
கடையேன் மிடிதூள் படநோய் விடவே
கனல்மால் வரைசேர் பெருமாளே

## பதவுரை

தவ லோகம் எலாம் = மிகவும் உலகங்கள் எல்லாம், முறையோ எனவே = முறையோ என்று ஓலமிட, தழல் வேல் கொடு போய் = நெருப்பை வீசும் வேலுடன் சென்று, அசுராரை = அசுரர்களின், தலை தூள் பட = தலைகள் தூள் படவும், ஏழ் கடல் தூள்பட = ஏழு கடல்கள் தூள்படவும், மாதவம் வாழ்வு உறவே = முனிவர்களின் சிறந்த தவம் வாழ்வுறுமாறும், விடுவோனே = அந்த வேலாயுதத்தைச் செலுத்தியவரே! கவர் பூ வடிவாள் = கவர்ச்சியுடைய மலர் போன்ற வடிவையுடையவளாகிய, குற மாது உடன் = வள்ளி நாயகியின் மீது, மால் கடன் ஆம் எனவே = அன்பு கொள்வது கடனாகும் என்று, அணை மார்பா = அவரை அணைந்த திருமார்பினரே, கடையேன் = கடைப்பட்டவனாகிய அடியேனுடைய, மிடி தூள்பட = வறுமை தூள்பட்டு ஒழியவும், நோய் விடவே = நோய் தொலையவும் அருள் புரிந்து, கனல் மால் வரை சேர் = பெருமையுடைய நெருப்பு மலையாம் திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! சிவ மாது உடனே = சிவம் என்கின்ற தலைவியுடன், அநுபோகம் அது ஆய் = இன்ப நுகர்ச்சி கொண்டவனாய், சிவ ஞான அமுதே பசி ஆறி = சிவஞானம் என்ற அமுதத்தையுண்டு பசி நீங்கி, திகழ்வோடு = விளக்கத்துடன், இருவோர் ஒரு ரூபம் அது ஆய் = அடியேனும் தலைவியும் ஆகிய இருவோரும் ஒரு வடிவாய் ஒன்றி, திசை லோகம் எலாம் = திசையில் உள்ளோரும் உலகில் உள்ள அனைவரும், அநுபோகி இவனே எனவே = சுகாநுபவம் உடையவன் இவன் ஒருவனே என்று வியந்து கூறும்படி, மால் அயனோடு அமரோர் = திருமால், பிரமன், தேவர் என்ற யாவரும், இளையோன் எனவே = இவன் இளையோன் என்றும், மறை ஓத = வேதமும் அங்ஙனமே எடுத்துக்கூற, இறையோன் இடமாய் = சிவபெருமானிடத்திலே, விளையாடுகவே = அடியேனும் உம்மைப் போல் விளையாடி மகிழ, இயல் வேல் உடன் மா = அழகிய வேலையும் மயிலையும், அருள்வாயே = தந்தருளுவீராக.

## பொழிப்புரை

உலகங்கள் எல்லாம் முறையோ என்று மிகவும் ஓலமிட, நெருப்பை வீசும் வேலுடன் சென்று அசுரர்களின் தலைகள் தூள்படவும், ஏழுகடல்கள் தூள்படவும், சிறந்த முனிவர்களின் தவம்வாழவும், அந்த வேலாயுதத்தைச் செலுத்தியவரே! கவர்ச்சியையுடைய மலர்போன்ற வடிவுடைய வள்ளிநாயகி மீது அன்பு வைத்தல் நமக்குக் கடனாகும் என்று அவரைத் தழுவிக் கொண்டவரே! கடையவனாகிய அடியேனுடைய வறுமை தூள்பட்டு ஒழியவும், நோய் நீங்கவும், நெருப்பு மலை

யாம் திருவண்ணுமலையில் வாழும் பெருமிதமுடையவரே! சிவம் என்ற தலைவியுடன் இன்ப நுகர்ச்சியுடையவனுய், சிவ ஞானம் என்ற அமுதத்தை யுண்டு பசியாறி, விளக்கத்துடன் நானும் தலைவியும் இருவரும் ஒரு வடிவாகி ஒன்றி, எட்டுத் திசையில் உள்ளவர்களும், உலகில் உள்ளவர்களும் இவன் ஒருவனே சுகபோகம் உடையவன் என்று என்னைக் கண்டு வியக்குமாறு, நாராயணர், பிரமதேவர், ஏனைய தேவர்கள் இவன் என்றும் இளையோன் என்று வியந்து கூற, வேதமும் அவ்வாறே கூற, சிவபெருமானிடத்திலே அடியேன் தேவரீரைப்போல் விளையாட, உமது வேலையும் மயிலையும் எனக்குத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**சிவமாதுடனே அநுபோகமதாய் :—**

சிவம்—நன்மை, அன்பு என்பவை சிவம் என்ற பெண் மணியுடன் கலந்து இன்புறுதல் இதனைச் சிவபோகம் என்பர்.

இந்தக் கருத்தைப் பிறிதொரு திருப்புகழிலும் அடிகளார் கூறியுள்ளார்.

**"சிவசுடரதனைப் பாவை மணமென மருவி"**
**—(திருநில) திருப்புகழ்.**

**"சிவஞான புண்டரிக மலர்மாதுடன் கலவி**
**சிவபோக மன்பருக அறியாதே"** **—திருப்புகழ்**

**சிவஞானமுதே பசியாறி:—**

உலகையறிவது—பாசஞானம்.
தன்னையறிவது—பசுஞானம்.
இறைவனை யறிவது—பதிஞானம்.

இந்தப் பதிஞானம் சிறந்தது. இதனைச் சிவஞானம் என்பர்.

இந்த சிவஞானமாகிய அமுதத்தை உண்ணுதல் வேண்டும். அதனுல் பசியாறி பவப்பிணிமாறி பரகதி சித்திக்கும்.

**"குகனெ குருபர னேஎன நெஞ்சிற்**
**புகழ அருள்கொடு நாவினிலின்பக்**
**குமுளி சிவஅமு தூறுக உந்திப் பசியாறி"**
**—திருப்புகழ்.**

**இருவோர் ஒருருபமதாய் :—**

சிவமாகிய தலைவியும் ஆன்மாவாகிய தலைவனும் இரண்டும் ஒன்ருகி நிற்றல்.

> ''இருவரும் உருகிக்காய நிலையென மருவித் தேவர்
> இளையவ னெனவித்தாரம் அருள்வாயே''
>
> —(திருநில) திருப்புகழ்.

**திகைலோக மெலா மநுபோகி இவனே யென :—**

திகை—திசைகளில் உள்ளவர்களும், உலகில் உள்ளவர்களும், அடியேனுடைய சிவானுபவத்தைக் கண்டு விம்மிதம் அடைந்து, ''இவனே சுகாநுபவச் செல்வம் உடையவன்'' என்று புகழ்ந்து கூறுவர்.

**மாலயனோ டமரோர் இளையோனெனவே மறையோத :—**

திருமாலும் திசைமுகனும் ஏனைய தேவர்கள் யாவரும் எளியேனைப் பார்த்து, ''இவன் என்றும் இளையோன்'' என்று வியந்து கூறுவர். வேதமும் அவ்வாறே வியந்து கூறும்.

**இறையோ னிடமாய் விளையாடுகவே இயல் வேலுடன்மா அருள்வாயே :—**

''அடியேன் என்றும் அகலாத இளமை பெற்று தேவரீர் சிவபிரானிடம் விளையாடுவது போல் அடியேனும் விளையாடி மகிழ உமது வேலையும் மயிலையும் எனக்குத் தந்தருள்'' என்று வேண்டுகின்ருர்.

> ''குறித்து நீயரு கழைத்து மாதவர்
> கணத்தின் மேவென அளித்து வேல்மயில்
> கொடுத்து வேதமு மொருத்த ஞமென அருள்வாயே''
>
> —(வெடித்த) திருப்புகழ்.

மா—குதிரை. இது ஆகுபெயராக மயிலைக் குறித்து நின்றது.

**தவலோகமெலா முறையோ எனவே :—**

தவ—மிகுதி. உலகங்கள் யாவும் மிகுதியாக முறையோ என்று கதறி ஒலமிட்டன.

**தழல்வேல் கொடுபோய் :—**

வேல் நூருயிரங்கோடி யண்டங்களில் உள்ள அக்கினிப் பிழம்பின் வடிவாயது.

அது அடியார்க்குச் சந்தனம் எனவும் கொடியார்க்கு வெந் தழல் எனவும் விளங்குவது.

**அசுரோர் தலைதூள்பட ஏழ்கடல் தூள்பட மா தவம் வாழ்வுறவே விடுவோனே :—**

முருகப் பெருமான் வேலை விட்டதனால், அசுரர்கள் தலைகள் பொடிபட்டன; ஏழுகடல்களும் வற்றித் துகள்பட்டன; மாமுனிவர்களின் சிறந்த தவம் வாழ்ந்து நிலைபெற்றது.

**கவர் பூ வடிவாள் குறமாது:—**

கவர்—கவர்ச்சி. வசீகரிப்பு. பூவைப்போன்ற கவர்ச்சியுள்ள திருமேனியுடையவர் வள்ளி பிராட்டியார்.

**மால் கடனாமெனவே அணைவோனே :—**

மனமொழிகளால் தன்னையே நினைந்து தவம் புரிந்தவர் வள்ளிநாயகியார்.

"**குருவியோட்டித் திரிந்த தவமானை**" —(அறிவிலா) திருப்புகழ்"

அடியவரை யாட்கொள்வது இறைவனது கடப்பாடாகும். "தன்கடன் அடியேனையுந் தாங்குதல்" என்பார் அப்பர் பெருமான்.

எனவே வள்ளி எம்பிராட்டியை யாண்டது முருகனுடைய கருணைத் திறத்தின் சிகரமாகும்.

வள்ளி பிறந்தது குறவர் குலம் என்ற சிறுமையைப் பாராது, அவர் புரிந்த தினைப்புனக் காவல் என்ற எளிமையைப் பாராமல், மூவர்க்குந் தேவர்க்கும் முதல்வனான முருகவேள் அவரை யாட்கொண்டார்.

**கடையேன் மிடி தூள்பட நோய் விடவே :—**

அருணகிரிநாதருடைய வறுமை போன்ற சிறுமையும், தொழுநோய் முதலிய துன்பங்களும் ஒரு கணத்தில் அகலுமாறு அருணாசலத்தில் ஆறுமுகப் பெருமான் ஆட்கொண்டருளினார்.

## கருத்துரை

அருணைமேவும் அரசே! வேல் மயில் தந்து என்னைக் காத்தருள்.

## திருப்புகழ்

சினமுடுவல் நரிகழுகு டன்பருந் தின்கணங்
கொடிகெருடன் அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ்
செடமளறு மலசலமொ டென்புதுன் றுங்கலந்
துன்பமேவு
சென்னவலை மரணவலை ரண்டுமுன் பின்தொடர்ந்
தணுகுமுட லநெகவடி விங்கடைந் தம்பரஞ்
சிறுமணலை யளவிடினு மங்குயர்ந் திங்குலந்
தோன்றுநாயேன்

கனகபுவி நிழல்மருவி யன்புறுந் தொண்டர்பங்
குறுகஇனி யருள்கிருபை வந்துதந் தென்றுமுன்
கடனெனது உடலுயிரு முன்பரந் தொண்டுகொண்
டன்பரோடே
கலவிநல மருவிவடி வஞ்சிறந் துன்பதம்
புணர்கரண மயில்புறமொ டின்புகொண் டண்டருங்
கனகமலர் பொழியஉன தன்புகந் தின்றுமுன்
சிந்தியாதோ

தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தகுகுகுகு குகுகுகுகு டங்குடங் குந்தடந்
தவில்முரசுபறைதிமிலைடிங்குடிங்குந்தடந்
தண்டர்பேரி
தடுடுடுடு டுடுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிடமிட டகுர்திகுகு சங்குவெண் கொம்புதிண்
கடையுகமொ டொலியகட லஞ்சவஞ் சன்குலஞ்
சிந்திமாளச்

சினமுடுகி அயிலருளி யும்பரந் தம்பரந்
திகையுரகர் புவியுளது மந்தரம் பங்கயன்
செகமுழுது மகிழஅரி அம்புயன் தொண்டுகொண்
டஞ்சல்பாடத்
திருமுறுவ லருளியென தெந்தையின் பங்குறுங்
கவுரிமன முருகவொரு கங்கைகண் டன்புறுந்
திருவருண கிரிமருவு சங்கரன் கும்பிடுந் தம்பிரானே.

## பதவுரை

தனனதன தனனதன தந்தனந் தந்தனந் தகுகுகுகு குகுகுகுகு டங்கு டங்கும்=தனனதன...டங்குடங்கும் என்று ஒலிக்கின்ற, தடம் தவில்=வளைவுள்ள தவிலும், முரசு=முரசு வாத்தியமும், பறை=பறையென்ற வாத்தியமும், திமிலை=திமிலை யென்ற பறை வாத்தியமும், டிங்கு டிங்குந்த அடர்ந்து=டிங்குடிங்குந் தென்று ஒன்றுகூடி பேரொலி செய்ய, அண்டர் பேரி=தேவர்களுடைய பேரி வாத்தியம், தடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண் டுண்டுடுண் டிமிடிமிட்டகுர் திகுகு=தடுடுடுடு...டகுர் திகுகு என்ற ஒலியுடன் ஒலி செய்ய, சங்கு=சங்கும், வெண் கொம்பு=வெண்ணிறமுடைய ஊது கொம்பும், திண் கடையுகமொடு ஒலிய=யுக முடிவுபோல் ஒலி செய்ய, கடல் அஞ்ச=சமுத்திரம் அஞ்சுமாறும், வஞ்சன் குலம் சிந்தி மாள=வஞ்சனாகிய சூரபன்மனுடைய குலமானது சிதறுண்டு அழியவும், சினம் முடுகி=சீற்றம் மிக வுண்டாக, அயில் அருளி=வேலாயுதத்தைச் செலுத்தி, உம்பர்=தேவர்கள், அந்த அம்பரம்=அந்த கடல், திகை=திசைகளில் உள்ளவர்களும், உரகர்=நாகர்களும், புவி உளது=பூமியில் உள்ளவர்களும், மந்தரம்=மந்தர மலையில் வாழ்பவர்களும், பங்கயன் செகம் முழுது மகிழ=பிரமனுடைய உலகத்தில் உறைபவர்களும் யாவரும் மகிழ்ச்சியடைய, அரி அம்புயன்=திருமாலும் பிரமதேவரும், தொண்டு கொண்டு=அடிமை பூண்டு, அஞ்சல் பாட=அபயங்கொடு என்று ஓலமிடும் பாடல்களைப் பாட, திருமுறுவல் அருளி=அழகிய புன்னகையைப் பூத்தருளி, எனது எந்தையின் பங்கு உறும்=எனது பிதாவாகிய சிவபெருமானுடைய பக்கத்தில் உள்ள, கவுரி மனம் உருக=உமாதேவியார் உள்ளம் உருக, ஒரு கங்கை கண்டு அன்பு உறும்=ஒப்பற்ற கங்காதேவி உமது ஆடலைப் பார்த்து அன்பு கொள்ளும், தம்பிரானே=தனிப் பெருந்தலைவரே! திரு அருணகிரி மருவும்=திருவண்ணாமலையில் வீற்றிருக்குந் தம்பிரானே! சங்கரன் கும்பிடும்=சிவமூர்த்தி உபதேச காலத்தில் வணங்குந் தம்பிரானே! சின முடுவல்=கோபங் கொள்ளும் நாயும், நரி=நரியும், கழுகு=கழுகும், பருந்தின் கணம்=பருந்தின் கூட்டமும், கொடி=காக்கையும், கெருடன்=கருடனும், அலகை=பேயும், புழு=புழுவும், உண்டு கண்டு இன்புறும்=உண்டும் கண்டும் மகிழ்ச்சியுறுகின்ற, சடம்=உடல், அளறு மலம்=சேறு போன்ற மலமும், சலமொடு=மூத்திரமும், என்பு துன்றும் கலம்=எலும்பும் கூடியுள்ள பாத்திரம், துன்பம் மேவும்=துன்பத்துடன் கூடிய, செனன வலை=பிறப்பு வலை, மரண வலை=இறப்பு வலை, ரண்டும் முன்பின் தொடர்ந்து அணுகும் உடல்=இந்த இரண்டும் முன் பின்னாகத் தோடர்ந்து நெருங்கி வரும் உடல், அநேக வடிவு இங்கு அடைந்து=பலவிதமான வடிவங்களை இவ்வுலகில் அடைந்து, அம்பரம் சிறு மணலை அளவிடினும்=கடலின் சிறு

மணலை அளவிட்டாலும், அங்கு உயர்ந்து=அந்த அளவில் மேற்பட்டு, இங்கு உலந்து ஒன்றும்=இங்கு அழிதலைப் பொருந்தும், நாயேன்=இத்தகைய உடம்புடன் கூடிய அடியேன், கனகபுவி நிழல் மருவி=பொன்னுலக நிழலில் இருந்து, அன்பு உறும் தொண்டர் பங்கு உறுக=தேவரீரிடம் அன்பு பூண்டுள்ள திருத்தொண்டரின் பக்கத்தில் சேர்ந்து பொருந்த, இனி அருள் கிருபை வந்து தந்து=இனி உமது அருட் கருணையை வந்து தர, என்றும் உன் கடன்=என்றும் உமது கடமையாகும், எனது உடல் உயிரும் உன் பரம்=அடியேனுடைய உடலும் உயிரும் உமது பாரமாகும், தொண்டு கொண்டு=அடியேனுடைய தொண்டினை ஏன்று கொண்டு, அன்பரோடே கலவி நலம் மருவி=அன்பர்களுடன் சேர்க்கை யின்பம் பொருந்தி, வடிவம் சிறந்து=என் அழகு சிறப்புற்று, உன் பதம் புணர் கரணம்=உமது திருவடியில் என் மனம் பொருந்த, மயில் புறமோடு இன்புகொண்டு=மயிலின் புறத்தே மகிழ்ச்சி பூண்டு, அண்டரும் கனகமலர் பொழிய - தேவர்களும் பொன் மலர் மழை பொழிய, உனது அன்பு உகந்து=உமது அன்பானது மகிழ்ச்சி கூடி, இன்று முன் சிந்தியாதோ=இன்றே என்னை முன்னதாகக் கருதாதோ?

## பொழிப்புரை

தனனதன தனனதன தந்தனந் தந்தனந் தகுதகுகு குகுகு குகு டங்குடங்கும் என்ற ஒலியுடன் தவில் முரசு பறை திமிலை என்ற வாத்தியங்கள், டிங்குடிங்கும் என்று ஒன்று கூடி முழக்கஞ் செய்யவும், தேவர்களின் பேரி என்ற வாத்தியம், தடுடுடுடு டுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண் டிமிடமிட டகுர்திகுகு என்று ஒலிக்கவும், சங்கு, வெண்மையான ஊது கொம்பு முதலியவை உகாந்த காலம்போல் ஒலிக்கவும், கடல் அஞ்சவும், வஞ்சனுகிய சூரபன்மனுடைய குலம் சிதறி அழியுமாறு, சினம் மூண்டு வேலாயுதத்தைச் செலுத்தி, தேவர்களும், அந்தக் கடலில் வசிப்பவர்களும், திசையிலுள்ளோர்களும், நாகர்களும், மந்தரமலை வாசிகளும், பிரமலோக வாசிகளும் மகிழுமாறும், திருமாலும் பிரமதேவரும் அடிமை பூண்டு, 'அபயந் தா' என்று ஓலமிட்டு பாடல்களைப்பாடவும், அழகிய புன்முறுவல் பூத்து, என் தந்தையாகிய சிவபெருமானுடைய பக்கத்தில் எழுந்தருளியுள்ள பார்வதி தேவி மனம் உருகவும், ஒப்பற்ற கங்காதேவி உமது ஆடலைக் கண்டு அன்பு கொள்ளவும், சிவபெருமான் வணங்கவும், திருவண்ணுமலையில் வீற்றிருக்குந் தனிப் பெருந் தலைவரே! கோபங்கொள்ளும் நாயும், நரியும், கழுகும், பருந்

தின் கூட்டமும், காக்கையும், கருடனும், பேயும், புழுவும், உண்டும் கண்டும் களிக்கின்ற உடல்; இது சேறு போன்ற மலம் மூத்திரம் என்பு முதலியவை கூடிய பாத்திரம்; துன்பம் நிறைந்த பிறப்பு வலை, இறப்பு வலை யென்ற இரண்டும் முன் பின்னுகத் தொடர்ந்துவரும் உடல்; அநேக விதமான வடிவங் களை இவ்வுலகில் அடைந்து, கடலின் சிறுமணல்களை அள விடினும் அவைகட்கு அதிகமாக இங்கு அழிபடுதலைப் பொருக் தும்; இத்தகைய அழிவையுடைய அடியேன், பொன்னுலக நிழலில் இருந்து, தேவரீரிடம் அன்பு பூண்டுள்ள, திருத்தொண் டரின் அருகில் சேர்ந்து பொருந்த, இனி உமது அருட்கரு ணையை வந்து தர, என்றும் உமது கடமையாகும்; எளியே னுடைய உடலும் உயிரும் உமது பாரமாகும்; அடியேனுடைய தொண்டினை யேற்றுக் கொண்டு, அன்பர்களுடனே சேரும் இன்பம் பொருந்தி, என் அழகு சிறப்புற்று, உமது திருவடியில் என் மனம் பொருந்த, மயிலின்மீது மகிழ்ச்சி பூண்டு, தேவர் களும் பொன் மலர் மழைபொழிய, உமது அன்பு உவந்து இன்றே அடியேனை முன்னதாக நினைக்காதோ ?

## விரிவுரை

இத் திருப்புகழில் அருணையடிகள், உடலின் அசுத்தத் தையும், அடியார்களின் உறவையும் கூறி, முருகன் கருணையை வேண்டுகின்றார்.

1: பின்னேயுள்ள நான்கு அடிகளில் போர்க்களத்தில் வாத் தியங்கள் ஒலிக்கும் ஆரவாரத்தை விரித்து விளம்புகின்றார்.

**சின முடுவல் நரிகழுகுடன் பருந்தின்கணம் கொடி கெருடன்**
**அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ் செடம் :—**

முடுவல்—நாய்; கொடி—காக்கை; செடம்—உடம்பு.

பாலுந் தேனும் பழமும் சோறும் பலவகையான பட்சணங் களும், வறியார்க்கும் உதவாமல், காலந்தவறாது, வயிறு புடைக்க வுண்டு வளர்க்கும் இந்த அருமையான உடம்பு, முடி வில் நாயும் நரியும், பேயும் கழுகும் உண்டு மகிழ அழிகின்றது.

**எரி எனக் கென்னும் புழுவோ எனக் கெனும் இந்த மண்ணும்**
**சரி எனக் கென்னும் பருந்தோ எனக் கெனும் தான்புசிக்க**
**நரி எனக் கென்னும் புன்னுயெனக் கென்னும் இந்நாறுடலைப்**
**பிரியமுடன் வளர்த்தேன் இதனுல் என்ன பேறெனக்கே.**

—பட்டினத்தார்:

**மலசலமொ டென்பு துன்றுங்கலம் :—**

கலம்—பாத்திரம்.

மலம், நீர், சீழ், தசை, எலும்பு இவைகளுடைய பாத்திரம் இவ்வுடம்பு.

**"தோலெலும்பு சீநரம்பு பீளைதுன்று கோளைபொங்கு**
**சோரிபிண்ட மாயுருண்டு வடிவான தூலம்"** —திருப்புகழ்.

**துன்பமேவு செனனவலை மரணவலை ரண்டு முன்பின்தொடர்ந்**
**தணுகு முடல் :—**

பிறப்பும் இறப்பும் இரு வலைகள். உயிராகிய பறவை இவ்வலைகளில் சிக்கிப் பலப்பல யுகங்களாகப் பரதவிக்கின்றது. பிறப்பும் இறப்பும் துன்பத்தைத் தருகின்றன. ஜனனாவஸ்தை மரணாவஸ்தை யென்பார்கள். பிறந்து இறந்து மாறி மாறி உயிர் வேதனை யடைகின்றது.

**"எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"**

என்கின்றார் மணிவாசகர்.

**அம்பரம் சிறுமணலை யளவிடினும் அங்குயர்ந் திங்குலந்து ஒன்றுநாயேன்:—**

அம்பரம்—கடல். கடற்கரையில் உள்ள நொய் மணல்களை யளவிட்டால், அதன் அளவினும் அதிகமாகப் பிறவிகளை யெடுத்திருக்கின்றோம்.

**"எழுகடல் மணலை யளவிடி னதிகம்**
**எனதிடர் பிறவி யவதாரம்"** —திருப்புகழ்.

**கடலெத்தனை மலையெத்தனை அத்தனை கன்மம்; அதற்**
**குடலெத்தனை யத்தனைகடல் நுண்மணல் ஒக்கும்; இந்தச்**
**சடலத்தை நான்விடு முன்னே உனைவந்து சார இருட்**
**படலத்தை மாற்றப்படாதோ நிறைந்த பராபரமே.** —தாயுமானார்.

**தொண்டர் பங்குறுக :—**

அடியவருடன் கூடும் கருணையைச் செய்யென்று அடிகள் ஆண்டவனிடம் வேண்டுகின்றார்.

"தொண்டரொடு கூட்டு கண்டாய்" என்கின்றார் தாயுமானார்.

ஆவுடன் கூடிய குருட்டாவும் ஊர்புகுமாப் போல், அடியருடன் கூடிய ஆன்மா பரகதியடையும்.

**என்று முன்கடன் :—**

"எளியேனை யாட்கொள்வது முருகா உனக்குக் கடனாகும்" என்கின்றார்.

**"தன் கடன் அடியேனையுந் தாங்குதல்" —அப்பர்.**

**"கடனாகுமிதுக் கனமாகும்" —(நிலையாத) திருப்புகழ்.**

**உடலுயிரு முன்பரம் :—**

அப்பனே! அடியேன் உடல் உயிர் எல்லாம் உன்னுடைய பாரமே யாகும். உன் ஆட்சிக்கு உட்பட்டவையல்லவா? நன்றே வரினும், தீதே வரினும் எனக்கென்ன? எல்லாம் உன் பாரம்" என்கின்றார்.

**"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்**
**ஆர்க்குப் பரமாம் அறுமுகவா" —நக்கீரர்.**

**உன்பதம் புணர்கரணம் :—**

கரணம்—மனம் முதலிய அந்தக்கரணங்கள். மனம் முதலிய கரணங்கள் முருகனுடைய திருவடியில் புணர வேண்டும்.

இங்ஙனம் அடியேன் முருகன் அடியில் மருவி மகிழும் போது அமரர்கள் கனகமலர் மழை பொழிவார்கள். "அமரர் தரு பூமாரியே சொரிய" என்று பிறிதொரு திருப்புகழிலும் கூறுகின்றார்.

**அன்புகந் தின்று முன் சிந்தியாதோ :—**

"அடியேன் மீது உமது அன்பு உவந்துஇன்றே எளியேனை யாள நீர் நினைக்கலாகாதா?" என்று அடிகளார் எம்பிரானிடம் முறையிடுகின்றார்.

**அயிலருளி யும்பரந் தம்பரம் :—**

அயிலருளியும் பரந்த அம்பரம் என்று பதச்சேதம் செய்தால், பரந்த அம்பரம் என்று பொருள்படும்.

அயிலருளி உம்பர் அந்த அம்பரம் என்று பதச்சேதம் செய்தால், வேலை விடுத்து தேவர்களும் அந்த கடலும் என்று பொருள்படும்.

உம்பரந்தம்பரம் என்ற சொல்நடை இனியதாகவுளது. "அலங்காரத்திலும் அம்பரம் பம்பரம் பட்டுழல மதித்தான் திருமருகா" என்று அழகாகச் சொற்களை யமைத்துள்ளார்.

### கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! கருணையுள்ளம் நினைத்து என்னை ஆட்கொள்ள வேண்டும்.

## திருப்புகழ்

சுக்கி லச்சுரொணி தத்தி லுற்றநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை
வந்துகோலத்
தொப்பை யிட்டவயி றிற்பெ ருத்துமிக
வட்ட மிட்டுடல வெப்ப முற்றுமதி
சொற்ற பத்தின்மறி யட்ச ரத்தினுடை
விஞ்சையாலே
கக்க நற்புவியி லுற்ற ரற்றிமுலை
யைக்கொ டுக்கவமுர் தைப்பு சித்துவளர்
கைக்க சத்தியொடு ழைத்து தத்துநடை
அந்தமேவிக்
கற்று வெற்றறிவு பெற்று தொக்கைமயி
லொத்த மக்கள்மய லிற்கு ளித்துநெறி
கட்டி யிப்படிபி றப்பி லுற்றுடல மங்குவேனோ
தெற்க ரக்கர்பவி ஷைக்கு லைத்துவிட
ணற்கு நத்தரச ளித்து முத்திகொடு
சித்தி ரத்திருவு ரத்த சக்கிரி தன் மருகோனே
செக்க ரத்தின்மலை முப்பு ரத்திலெரி
யிட்ட சத்திசிவ னுற்று நத்தமிகு
சித்த னைத்தையும்வி ழித்த சத்தியுமை தந்தபாலா
தர்க்க மிட்டசுர ரைக்கெ லித்துமலை
யுக்கெ ழுக்கடல்கொ ளுத்தி அட்டதிசை
தட்ட முட்டையடை யக்கொ டிப்புகையின்
மண்டும்வேலா
தத்தை வித்ருமநி றத்தி முத்தணிகு
றத்தி கற்பகவ னத்தி சித்தமவை
தக்கு நத்தஅரு ணைக்கி ரிக்குள்மகிழ் தம்பிரானே.

## பதவுரை

தெற்கு அரக்கர்=தென் திசையிலிருந்த அரக்கர்களின், பவிஷை குலேத்து=செருக்கை அழித்து, விடணற்கு=விபீஷணனுக்கு, நத்து அரசு அளித்து=விரும்பத்தக்க அரசாட்சியைத் தந்து, முத்தி கொடு=முத்தியைக் கொடுத்தவரும், சித்திர திரு உரத்த=அழகிய லட்சுமியை திருமார்பில் தரித்தவரும், சக்கிரி தன்=சக்கராயுதத்தை ஏந்தியவருமான திருமாலின், மருகோனே=திருமருகரே! செ கரத்தில் மலே=செம்மையான திருக்கரத்தில் மேரு மலேயாம் வில்லே ஏந்தி, முப்புரத்தை எரி சத்தி=மூன்று புரங்களில் தீயிட்ட வன்மையுடைய, சிவன் உற்று நத்த=சிவபெருமான் உடனிருந்து விரும்ப, மிகுசித்து அனேத்தையும் விழித்த=மிகுந்த சித்துக்கள் எல்லாவற்றையுங் கண்ட, சத்தி உமை=சத்தியாகிய உமாதேவி, தந்த பாலா=பெற்ற குழந்தையே! தர்க்கம் இட்ட அசுரரை கெலித்து=வாதிட்டு வந்த அசுரர்களே வென்று, மலே உக்க=மலேகள் பொடியாக, எழு கடல் கொளுத்தி=ஏழு கடல்களேயும் எரியிட்டு, அட்ட திசை தட்ட=எட்டுத் திசைகளும் நொறுங்க, முட்டை அடைய=தவிடுபட, புகை கொடியின்=நெருப்பின் புகைக் கொடியுடன், மண்டும் வேலா=விரைந்து நெருங்கும் வேலாயுதரே! தத்தை=கிளி போன்றவளும், வித்ரும நிறத்தி=பவள நிறமுடையவளும், முத்து அணி=முத்து மாலே யணிந்தவளும் ஆகிய, குறத்தி=வள்ளி பிராட்டி, கற்பக வனத்தி=கற்பக வனத்தில் வாழ்கின்ற தெய்வயானே யென்ற இருவருடைய, சித்தம் அவை தக்கு நத்த=உள்ளங்கள் பொருந்தி விரும்புமாறு, அருணேக்கிரிக்கு உள் மகிழ்=திருவண்ணுமலேயில் மகிழ்கின்ற, தம்பிரானே=தனிப்பெருந் தலேவரே! சுக்கில சுரோணிதத்தில் உற்ற=சுக்கிலமும் சுரோணிதமும் ஒன்றுபட, நளினத்தில் அப்பு என=தாமரையிலே நீர்போல, ரத்தம் முற்றி=உதிரம் நிறைந்து, சுக சுக்கில குளிகை ஒத்து=சுகந்தரும் சுக்கிலத்தாலாய மந்திர சக்தியுள்ள ஒரு மாத்திரையைப் போல், கெர்ப்ப குகை வந்து=கருப்பையில் தோன்றி, கோல தொப்பை இட்ட வயிற்றில் பெருத்து=அழகிய தொப்பை யிடுகின்ற தாயின் வயிற்றில் பெருத்து வளர்ந்து, மிக்க வட்டம் இட்டு=மிகவும் அந்த வயிற்றில் சுழலுதல் உற்று, உடல் வெப்பம் உற்று=உடலில் சூடு வரப்பெற்று, மதி சொற்ற பத்தில்=மாதம் கணக்கிட்டு சொல்லப்பட்ட பத்தாவது மாதத்தில், மறி=கீழ் மேலாக, அட்சரத்தினுடை விஞ்சையாலே=பிரமன் தலேயில் எழுதிய எழுத்தின் மந்திர சக்தியினுல், கக்க=வெளியிலே தள்ளிவிட, நல் புவியில் உற்று=நல்ல இப்பூமியில் பிறந்து. அரற்றி=அழுது, முலேயை கொடுக்க=தாயார் முலேப் பாலேத் தர, அமுர்தத்தை புசித்து=அந்த முலேப் பாலமுதத்தை யுண்டு, வளர்கைக்கு அசத்தியொடு=வளர்வதற்கு வலியின்மையால், உழைத்து=முயற்சி செய்து,

தத்து நடை அந்தம் மேவி=தத்தி தத்தி நடக்கும் நடையழகைப் பெற்று, கற்று=நூல்களைப் படித்து, வெற்று அறிவு பெற்று=பயனிலாத அறிவைப் பெற்று, தோக்கை மயில் ஒத்த=தோகை மயில் போன்ற, மக்கள் மயலில்குளித்து=பெண் மக்களின் மையலில் மூழ்கி, நெறி கட்டி=விதியினுல் கட்டுண்டு, இப்படி பிறப்பில் உற்று=இவ்வண்ணம்பிறவியை யடைந்து, உடலம் மங்குவேனே=முடிவில் உடல் அழிந்து இறந்து படுவேனே?

## பொழிப்புரை

தென் திசையில் விளங்கிய இலங்கையில் வாழ்ந்த இராவணாதியசுரர்களின் பெருமையையும் செருக்கையும் அழித்து, விபீஷணருக்கு விரும்பத்தக்க அரசாட்சியையும் முத்தியையும் வழங்கியவரும், அழகிய இலக்குமியை மார்பில் தரித்தவரும், சக்கரபாணியுமாகிய திருமாலின் திருமருகரே! செம்மையான திருக்கரத்தில் மேருமலையாகிய வில்லையேந்தி முப்புரங்களில் நெருப்பையிட்ட ஆற்றலுடைய சிவபிரான் உடனிருந்து விரும்ப, மிகுந்த சித்துக்கள் அனைத்தையும் கண்ட உமாதேவியார் பெற்ற பாலகரே! வாதிட்டு வந்த அசுரர்களை வென்று, மலைகள் பொடியாக, ஏழு கடல்களையும் எரியிட்டு, திசைகள் நொறுங்கிப் பொடியாக, அக்கினிப் புகைக் கொடியுடன் சென்ற வேலாயுதரே! கிளி போன்றவளும், பவளநிறமுடையவளும், முத்துமாலை தரித்தவளும் ஆகிய வள்ளியம்மை, கற்பகவனத்தில் வாழும் தெய்வயானையம்மை என்ற இருவருடைய உள்ளங்கள் பொருந்தி விரும்புமாறு திருவண்ணுமலையில் உறையும் தனிப்பெருந் தலைவரே! சுக்கில சுரோணிதங்கள் ஒன்றுபட்டு, தாமரையிலை நீர்போல, உதிரம் நிறைந்து சுகந்தரும் சுக்கிலத்தாலாய ஒரு மந்திர சக்தியுள்ள மாத்திரை அளவைப்பூண்டு கருப்பையில் தோன்றி, அழகிய தொப்பையிடுகின்ற வயிற்றிலே வளர்ந்து பருத்து, சுழற்சியடைந்து, சூடுவரப்பெற்று, பத்தாம் மாதத்தில், கீழ்மேலாகி, அயன் எழுதிய எழுத்தின் சக்தியால், வெளியில் தள்ளப்பட்டு, பூமியில் பிறந்து, அழுது, தாய் முலைப்பால் உண்டு, வளரும் வலியின்மையால் பெரிதும் முயன்று, தளர்நடையிட்டு அழகாக வளர்ந்து, படித்தும் பயனற்ற அறிவைப் பெற்று, தோகை மயில்போல் மாதர் மயலில் மூழ்கியும், விதியினுல் கட்டுண்டும், இவ்வாறு பிறவியை யடைந்து முடிவில் வீணே உடல் அழிந்து அடியேன் இறந்து படுவேனே?

## விரிவுரை

**சுக்கிலச் சுரொணிதத்திலுற்ற :—**

ஆணின் சுக்கிலமும், பெண்ணின் சுரோணிதமும் ஒன்று பட்டு கரு உற்பத்தியாகின்றது.

**சுக்கிலக் குளிகை யொத்து கெர்ப்ப குகை வந்து :—**

சுக்கிலத்தால் ஒரு மந்திர சக்தியால் ஆய ஒரு மாத்திரை போல் திரண்டு கரு வளர்கின்றது.

"பனியின்விந்துளி போலவே கருவிலூறு
மளவிலங்கொரு சூசமாய் மிளகுதுவர்
பனை தெனங்கனிபோலவே பலகனியின் வயிருகி"
—திருப்புகழ்.

"..................ஒழுகிய விந்து
ஊறுசு ரோணித மீது கலந்து
பனியிலோர் பாதி சிறுதுளி மாது
பண்டியில் வந்து புகுந்து திரண்டு
பதும வரும்பு கமடமி தென்று
பார்வை மெய் வாய் செவி கால்கைக ளென்ற
உருவமு மாகி உயிர் வளர் மாதம்
ஒன்பதுமொன்றும் நிறைந்து மடந்தை
உதரமகன்று புவியில் விழுந்து" —பட்டினத்தார்.

**அக்ஷரத்தினுடை விஞ்சையாலே :—**

குழந்தை பிறக்குமுன் அதன் தலையில் பிரமதேவன், அதன் வாழ்க்கைத் திறத்தை எழுதி விடுகின்ருன். அந்த விதிப்படியே யாவும் நடைபெறும்.

"வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலாய
அனைத்தாய நூலகத்தும் இல்லை"

என்கின்ருர் ஔவையார்.

**வளர்கைக் கசத்தியொ டுழைத்து ;—**

வளர்கைக்கு அசத்தியொடு உழைத்து பிறந்த குழந்தை பாலுண்டு, கவிழ்ந்து படுக்கவும், எழுந்து இருக்கவும்; நிற்கவும், ஆற்றலின்றி முயன்று முயன்று செய்கின்றது.

**தத்துநடை அந்தமேவி :—**

குழந்தை மெல்ல மெல்லத் தளர்நடையிட்டு நடக்கும் அழகு, பெற்ருரையும் உற்ருரையும் மகிழ்விக்கும். அந்த நடை மிக அழகியது.

**கற்று வெற்றறிவு பெற்று :—**

படிக்கவேண்டிய நூல்களைப் படிக்கவேண்டும். பிழைகள் அனைத்துக்கும் தலையாய பிழை அறிவு நூல்களைக் கல்லாததுவே யாகும். ஆதலால் பட்டினத்து அடிகளார் எடுத்த எடுப்பில் "கல்லாப்பிழையும்" என்றார். "அறிவு நூல் கல்லா மூடர்" என்கின்றார் அருணகிரிநாதர். "கற்பவை கற்க" என்றார் திருவள்ளுவர்.

"அறிவுநூல் இன்னதென்றே உணராது, உலகநூல்களைக் கற்று, பயனற்ற அறிவைப் பெற்று மாந்தர் அவலமுறுகின்றார்கள்.

**தொக்கைமயி லொத்த மக்கள் :—**

தோகை என்ற சொல் சந்தத்தை நோக்கி தொக்கை யென வந்தது. மயில்போன்ற சாயலுடைய விலை மகளிரது மயல் கடலில் மக்கள் மூழ்கி அல்லற்படுகின்றார்கள்.

**விடணற் கரசளித்து :—**

வீடணன் என்ற சொல் விடணன் என வந்தது.

விபீஷணன் என்ற வடமொழிச் சொல் தமிழில் வீடணன் என வந்தது.

விபிஷணன் என்ற பேர் சிவசகஸ்ர நாம மந்திரங்களில் ஒன்று. இச்சொல்லுக்குப் "பயமற்றவர்" என்பது பொருள்.

மகாபாரதம் சாந்தி பர்வத்திலே 296வது அத்யாயத்தில் தட்சப் பிரசாபதி சிவமூர்த்தியை சகஸ்ர நாமங்களால் துதி செய்யும் இடத்தில் "விபீஷணாய நம" என்று வருகின்றது.

இந்த சிவநாமத்தை இராவணனுடைய தம்பிக்குச் சூட்டினார்கள்.

தன்பால் அடைக்கலம் புகுந்த விபீஷணருக்கு இராமர் அபயந்தந்து இலங்கை சாம்ராஜ்யமும், முடிவில் முத்தியும் தந்தருளினார்.

"ஆதிநாயகன் ஆக்கிய நூன்முறை
நீதியானை நெடுமுடி சூட்டுவாய்"

என்று இராமர் இலட்சுமணனுக்குக் கட்டளையிட்டார்.

"ஐயன் ஆணையினால் இளங் கோளரி
கையினால் மகுடங் கவித்தானரோ" —கம்பராமாயணம்.

முன்னமே இராமர் வாக்கினால் முடிசூட்டினார். ஆதலால் இளையோன் கையினால் முடி சூட்டினான் என்ற நயத்தை யுன்னுக.

**செக்கரத்தின்மலை :—**

திரிபுரம் எரிக்கச் சிவபெருமான் புறப்பட்டபோது தேவர்கள் மேருமலையை வில்லாகச் செய்து தந்தார்கள். அதனை எம்பிரான் இடக்கரத்தில் ஏந்தி நின்றார்.

இடக்கரம் உமாதேவியின் திருக்கரம். ஆதலால் அது சத்தியின் பெருமையாகும்.

**முப்புரத்தி லெரியிட்ட சத்தி :—**

திரிபுரத்தில் தீ மூட்டிய சக்தி உமையம்மை என்றும் பொருள்படும்.

**சித்தனைத்தையும் விழித்த சத்தி யுமை :—**

அஷ்டமாசித்திகள்.

அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பவை.

| | | |
|---|---|---|
| 1. | ஆன்மாப் போலாதல் | **அணிமா.** |
| 2. | மகத்துவமாதல் | **மகிமா.** |
| 3. | தன்னுடல் கண்டிப்பின்றாய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவ வல்லவனாதல் | **கரிமா.** |
| 4. | இலகுத்துவமாதல் | **இலகிமா.** |
| 5. | வேண்டுவனவற்றை யடைதல் | **பிராத்தி.** |
| 6. | நிறையுளனாதல் | **பிராகாமியம்.** |
| 7. | ஆட்சியுளனாதல் | **ஈசத்துவம்** |
| 8. | எல்லாந் தன்வசமாக்க வல்லவனாதல் | **வசித்துவம்** |

இத்தகைய சித்திகளின் பிறப்பிடம் தேவி. அப்பிராட்டியின் திருவருளினாலேயே சித்திகள் சித்திக்கும்.

**சித்திகள் எட்டன்றிச் சேரெட்டி யோகத்தால்**
**புத்திக ளானவை எல்லாம் புலப்படும்**
**சித்திகள் எண்சித்தி தானுந் திரிபுரை**
**சத்தி யருள்தரத் தானுள வாகுமே.** —**திருமந்திரம்.**

சிவஞானிகளுக்கு சித்திகள் அடிமையாகிப் பணிபுரியும்.

**திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே**
**சென்றோடி யாடி வருவீர்**
**செம் பொன்மக மேருவொடு குணமேரு என்னவே**
**திகழ்ந்துருவம் அளவளாவி**

# கற்பு

---

## இந்தளம்

இந்தளம் சுந்தரம் பிள்ளையவர்கட்கு ஒரே புதல்வி. சுந்தரம் பிள்ளை திருவல்லிக்கேணியில் சில்லறைக் கடை வைத்திருந்தார். அவருடைய முன்னோர்கள் வாங்கிய சிறு வீட்டில், தன் சொல் தட்டாத மங்களம்மாளுடன் சுந்தரம் சுகமாக வாழ்ந்து வந்தார். சிறிய வியாபாரம் ஆனாலும், அவர் மனம் போதும் என்ற எண்ணத்தால் திருப்தியுடன் சாந்தி பெற்றிருந்தது.

மகிழ்ச்சியென்பது, செல்வத்தின் மிகுதியினாலேயோ, பெரிய மாளிகையினாலேயோ உண்டாவதில்லை, ஏர் கண்டிஷன் அறையில் இருக்கும் ஒருவன் மனங் கொதிப்புடன் இருப்பான். வெய்யிலில் விறகு பிளப்பவன் மனம் குளிர்ந்து கோலாகலமாக இருப்பான். கோடீச்சுரன் முகத்தில் கவலை நிழல் படிந்திருக்கும். ஏழையின் முகத்தில் மகிழ்ச்சி ஒளி படர்ந்திருக்கும்.

ஆகவே சுந்தரம் பிள்ளை தனக்கு வரும் சிறு வருவாயைக் கொண்டு நிம்மதியாகக் காலந் தள்ளினார். வருமான வரித் தொல்லை; விற்பனை வரித் தொல்லை; வேலையாட்களின் வேலை நிறுத்தம் முதலிய இடர்ப்பாடுகள் அவரிடம் எட்டிப்பார்க்கவில்லை.

---

உக்ரமிகு சக்ரதரன் என்னநிற்பீர் கையில்
உழுந்தமிழும் ஆசமனமா
ஓரேழு கடலையும் பருகவல்லீர் இந்த்ரன்
உலகும்அயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா எடுத்துவிளை யாடுவீர்
ககனவட் டத்தையெல்லாம்
கடுகிடை யிருத்தியே அஷ்டகுல வெற்பையும்
காட்டுவீர் மேலும் மேலும்
மிக்கசித்திக ளெல்லாம் வல்லநீ ரடிமை முன்
விளங்க வருசித்தி இலிரோ
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

### கருத்துரை

திருவருணை மேவிய திருவேலவரே! பிறப்பு அறச் சிறியேனுக்கு அருள் செய்.

பூஜை, பாராயணம், கோயில், குளம், தேர்த் திருவிழா என்று போவார் வருவார்.

அவருடைய இல்லக் கிழத்தி மங்களம்மாள், பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாக, சிக்கனமாகக் குடும்பத்தை நடாத்தி வந்தாள். அது வேண்டும் இது வேண்டும் என்று அவளுடைய உள்ளத்தில் ஆசைக் கொடி படரவில்லை.

அவர்களின் தவப்பயனுக இந்தளம் பிறந்து வளர்ந்தாள். தங்கக் கொடி போல் திகழ்ந்தாள். அவள் படிக்கும் பள்ளியில் ஒரு முழு நிலாவைப் போல் காட்சியளித்தாள். படிப்பில் முதன்மையிடம் பெற்ருள். மற்ற மாணவிகள் இவளைக் கண்டு பொருமைப்பட்டார்கள். அடக்கமாகவும், ஆசிரியைகளிடம் அன்பாகவும், கல்வியில் கண்ணுங் கருத்துமாகவும் இருந்தாள். பள்ளி விடுமுறை நாட்களில் வீட்டு வேலைகளைப் பம்பரமாகச் சுழன்று தாய்க்குத் துணையாகச் செய்வாள். அவளால் பெற்ருேர்க்கும் மற்ருேருக்கும் ஒருவிதமான தொல்லையும் இல்லை.

செழு நிலத்திலே வளர்ந்த செங்கரும்பு போல் வளர்ந்தாள். உடம்பு மட்டும் வளரவில்லை. உணர்வும் வளர்ந்தது. ஆண்டுதோறும் மேல் வகுப்புக்குச் சென்ருள். பள்ளியில் நடைபெறும் நாடகங்களில் கதாநாயகியாக நடிப்பாள். தேனும் நாணும் இனிய தீங்குரல். அவளுடைய இனிய பாடலைக் கேட்டவர்கள் மெய் மறந்து விடுவார்கள்.

ஒருநாள் பள்ளியில் பாடம் நடக்கின்றபோது, இராமாயணத்தில் கதாநாயகனுன இராமன் சிறந்தவனு? பாரதத்தின் கதாநாயகனுன தருமன் சிறந்தவனு? என்ற வினு எழுந்தது. மாணவிகள் பலர் பலவாறு கூறினுர்கள்.

இந்தளம் எல்லோருடைய சொற்களையும் கேட்டுச் சும்மாவிருந்தாள். தலைமையாசிரியை "இந்தளம்! நீ என்ன கூறுகின்ருய்?" என்று கேட்டாள்.

இந்தளம் "அம்மா! இராமர் ஏகபத்னி விரதம் உடையவர். தந்தை சொல் தட்டாதவர். சத்திய சீலர். உடன் பிறந்தவனுக்காகச் சாம்ராஜ்யத்தையே வேண்டாம் என்று கூறிக் கானகம் போன தியாக சீலர். மூவுலகங்களையும் வென்ற இராவணனை ஈராயிரம் வெள்ளம் அசுர சேனைகளுடன் கொன்றவர். அதனுல் "ஸ்ரீ ராம ஜெயம்" என்று முதலில் எழுதும் முதன்மை பெற்றவர். இவ்வாறு இராமருடைய பெருமையும் அருமையும் இமயம் போன்றது.

இராமர் நற்குணசீலர்; அறநெறிவழுவாதவர். ஆனுல் இராமரை விட தருமர்தான் சிறந்தவர். ஏன் என்ருல் இராமர் நாராயணரு

டைய அவதாரம், ஆகவே அவர் கடவுள். தருமர் நம்மைப்போல ஒரு மனிதர். கடவுளின் அவதாரமாகிய இராமரிடம் குணநலங்கள் அமைவதில் என்ன பெருமையிருக்கின்றது? மனிதனிடம் குணநலங்கள் அமைந்திருப்பதுதானே பெருமை. அதனுல் தான் தருமர் சிறந்தவர். நல்ல ஒரு மனிதனைப் பார்த்து இவர் இராமர் போன்றவர் என்று கூறுகின்றுர்களில்லை. இவர் தரும ராஜர். என்கின்றுர்கள். எனவே இராமரைப் பார்க்கினும் தருமர்தான் சிறந்தவர்" என்று நயமாகவும் ஆணித்தரமாகவும், நியாயமாகவும் கூறினுள். அப்போது பலத்த கரகோஷம் உண்டாயிற்று.

இந்தளம் P.U.C. தேர்வில் தேர்ச்சி பெற்றுள். இவளுடைய ஏற்றத்தையும் தோற்றத்தையுங் கண்ட தாய் தந்தையர் இவளுக்கு நல்ல கணவனுக அமைய வேண்டும் என்று கருதி அதுபற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்:

இந்தளத்தின் அழகு அறிவு பண்பு நிறம் திறம் இவைகளையறிந்தார் பஞ்சாபகேசம்பிள்ளை. I.A.S. படித்த தனது மகன் செங்கல்வராயனுக்கு இந்தளத்தை மணம் பேச வந்தார். பையன் I.A.S. படித்தவன் என்றுல் யாருக்குத்தான் பெருமிதம் உண்டாகாது.

சுந்தரம் பிள்ளை அது பற்றி மனைவியிடம் கலந்து ஆலோசித்தார். செங்கல்வராயன் பெரும் படிப்பு படித்தவன். எதிர் காலத்தில் உயர்ந்த பதவியில் அமர்வான். ஆகவே அவனுக்குத் தம் மகளைத் தருவது என்ற முடிவுக்கு வந்தார்கள்.

மாப்பிள்ளை இந்தளத்தைப் பார்க்க வந்தான். அவன் கையில் ஒரு சிறு தகர டின்னும் அதன் மீது ஒரு தீப்பெட்டியும் இருந்தன. முகத்தில் ஒன்றும் இல்லை. இந்தக் காட்சி இந்தளத்திற்கு அறவே பிடிக்கவில்லை.

இந்தளம் தன் தாயாரைப் பார்த்து "அம்மா! இந்த மனிதரை எனக்குப் பிடிக்கவில்லை. படிப்பு முக்கியமன்று. பண்புதான் முக்கியம்" என்றுள்.

மங்களம்மாள் மகள் மீது சீறி விழுந்தாள். "அடி அசடே! உனக்கு என்ன தெரியும்? நீ சிறு பெண். எங்களுக்குத் தெரியாத ஆலோசனையா? இந்தக் காலத்தில் I.A.S. படித்த மாப்பிள்ளை தவஞ் செய்தாலும் கிடைக்குமா? பையனுக்கு இனி எதிர்காலம் மிகவும் உயர்வாக இருக்கும். நீ செல்வச் சீமாட்டியாக வாழ்வாய். தாய் தந்தையருடைய சொல்லைத் தட்டலாமா? நீ எங்களுக்கு ஒரே புதல்வி. உன் வாழ்வில் எங்களுக்கு எவ்வளவு அக்கரையிருக்கும். நீ போய் உன் வேலையைப் பார்" என்றுள். இந்தளம் உள்ளத்தில் வேதனையுடன் தலைகுனிந்து மௌனம் ஆனுள்.

பஞ்சாபகேசம் பிள்ளையும் சுந்தரம் பிள்ளையும் பேசி திருமண நாளைக் குறிப்பிட்டார்கள். நல்ல நாளில் நிச்சயதார்த்தம் நடை பெற்றது. மாப்பிள்ளை வந்திருந்தான்.

சுந்தரம் பிள்ளை பூசை யறையில் முருகனுக்குத் தீபாராதனை காட்டி, திருநீறு கொணர்ந்து இனி மருமகனுகப் போகும் செங்கல்வ ராயனுடைய நெற்றியில் இட்டார். அவன் அதை அவருக்குத் தெரி யாமல் இடக்கையால் அழித்துவிட்டான்.

இதைச் சாளரத்தின் வழியே பார்த்துக் கொண்டிருந்த இந்தளத் துக்கு நெருப்பை மிதித்தது போல் இருந்தது. அவள் உள்ளத்தில் பெரும் புயல் வீசியது, தலையில் பாராங்கல் வைத்தது போல் கனத் தது. திருமணத்துக்கு உறுதியான பின் இனி என்ன செய்ய முடியும். என் வாழ்வு இருண்டுவிட்டதே என்று எண்ணி ஏங்கினுள். அவ ளுடைய கண்களிலிருந்து ஆருக நீர் வழிந்தது.

மறுநாளே திருமணப் பத்திரிகை அச்சிட்க் கொடுத்தார்.

சுந்தரம் பிள்ளையின் தங்கை தன் மகனுடன் அவருடைய வீட் டுக்கு வந்து தமையன் கால்மீது விழுந்து அழுதாள்.

"அண்ணு! எனக்கு ஒரே மகன். தங்களுக்கும் ஒரே மகள். என் மகனுக்குப் பெண்ணைக் கொடுக்காமல் அன்னியனுக்குப் பேசி முடித் தது என்ன நியாயம்? இது என்ன முறை? எல்லாந் தெரிந்த தாங்கள் இப்படிச் செய்யலாமா? நான் தங்களையே நம்பி யிருந்தேனே. நம்பிய என்னை நட்டாற்றில் தள்ளலாமா? இது தகுமா? இது முறையா? என் பையனுக்கு என்ன குறை? படிப்பைப் பார்த்தீர்களே தவிர உடன் பிறந்தாளை உற்றுப் பார்த்தீரா?" என்று கூறிப் புலம்பினுள்.

சுந்தரம் பிள்ளை "அம்மா! அழாதே. நல்ல நேரத்தில் அழக் கூடாது. இது அபசகுனம். எல்லாம் முடிந்துவிட்டது. நிச்சய தார்த்தம் ஆகிவிட்டது. பத்திரிகை அச்சிட்டு அனுப்பியாயிற்று. இனி ஒன்றும் செய்ய முடியாது. விதியை வெல்ல முடியுமா? விதி வழி தானே மதி போகும். இவளுக்கு அவன் என்று பிறக்கும்போதே எழுதிதானே பிறக்கின்ருர்கள். உன் மகனுக்கு வேறு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்வாயாக" என்று கண்டிப்பாகக் கூறினுர்.

அத்தை மகன் அளகேசனை ஜன்னல் வழியே பார்த்தாள் இந்தளம். அளகேசனுடைய நெற்றியில் திருநீறு. முகத்தில் ஒரு களை. கையில் திருப்புகழ்; அவனுடைய பார்வையில் சாந்தம்; அவ னிடமிருந்து பாய்ந்தது காந்தம். ஆ! இவரிடமிருக்கின்றது அடக்கம்; அன்பு, குணம் இதுதானே முக்கியம். நாம் இவரை யல்லவா மணந்து கொள்ள வேண்டும்" என்று எண்ணினுள்.

படிப்பைவிடப் பண்புதான் சிறந்தது.

"அரம்போன்ற கூர்மைய ராயினும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்"

என்கின்ருரே திருவள்ளுவர்.

எல்லாம் முடிந்த பின் திருமணத்தை எப்படி மாற்ற முடியும்? என்று பலப்பல நினைத்தாள் இந்தளம்.

சுந்தரத்தின் தங்கை அழுது கொண்டே நின்ருள். சுந்தரத்தின் மகன் அளகேசன் ஜன்னல் பக்கம் மின்னல்கொடி போல் நிற்கும் மங்கை நல்லாளைப் பார்த்துப் புன்னகை பூத்தான். அவள் குனிந்து கடைக்கண்ணுல் கண்டாள். அவள் பவள இதழ் விரிந்தது. அவளுடைய கடைக்கண் பார்வை அவனைக் கிறுகிறுக்க வைத்தது. அவன் உடம்பில் இன்ப மின்சாரம் பாய்ந்தது.

சுந்தரம் பிள்ளையின் வன்சொல்லால் மனம் புண்ணுகிய தங்கை, மகனுடன் புறப்பட்டுச் சென்ருள். அளகேசனுடைய உடம்பு மட்டும் போயிற்று; உள்ளம் உணர்வு யாவும் அவ்விடமே நின்று விட்டன.

மறுநாள் அதிகாலை எழுந்தாள் இந்தளம். "அம்மா! அம்மா!" என்று அழைத்தாள். தாய் ஓடி வந்தாள். "அம்மா! மேலே ஏதோ ஒன்று ஊர்ந்து சென்றது. அதனிடமிருந்து பச்சையாகக் கசிந்து என் கண்ணில் விழுந்தது. பார்வையிழந்துவிட்டேன். அம்மா நீ எங்கேயிருக்கின்ருய்?" என்று விம்மி விம்மி யழுதாள். கண் டாக்டர் வந்து பார்த்தும் பயன் உண்டாகவில்லை.

"அம்மா! நான் குருடியாகிவிட்டேன், இனி எனக்கு என்ன வாழ்வு?" என்று அழுது அழுது புலம்பினுள். தந்தையார் சிந்தை நொந்தார்.

இந்தச் செய்தி பிள்ளை வீட்டாருக்கு எட்டியது. மாப்பிள்ளையாகிய செங்கல்வராயன் "கண்ணில்லாத குருடியை மணந்துகொள்ள மாட்டேன்" என்று கூறிவிட்டான். இரு வீடுகளிலும் ஒரே பரபரப்பு.

அச்சிட்ட பத்திரிகையை யாருக்கும் அனுப்பவில்லை. பஞ்சாபகேசம் பிள்ளை அவசரமாக வேறு ஒரு தக்க இடத்திலே ஒரு பெண்ணை நிச்சயித்தார். அதே தேதியிலே திருமணத்தைத் தன் மகனுக்கு நடத்திவிட்டார்.

சுந்தரம்பிள்ளை உள்ளம் ஒடிந்து ஒரு மூலையில் அமர்ந்துவிட்டார். தங்கை யழுதாளே! அவள் இட்ட சாபமோ? தெய்வ கோபமோ? என் புதல்வி கண்ணையிழந்தாளே? இனி என் செய்வேன், கண்ணிழந்த பெண்ணை இனி யார் மணந்து கொள்வார்கள்" என்று எண்ணி ஏங்கினுர்.

தங்கை ஓடோடி வந்து அண்ணன் புதல்வியைக் கட்டியணைத்து அழுதாள்.

சுந்தரம்பிள்ளை "அம்மா! உன் மகன் விரும்பினால் இந்தளத்தைத் தருகின்றேன்" என்றார்.

அளகேசனை அழைத்து, "அப்பா! இந்தளத்தை மணந்துகொள்ள உனக்குச் சம்மதமா?" என்று கேட்டார்.

அளகேசன் "மாமா! இந்தளம் கண்ணிழந்துவிட்டாள். அவளை மணந்து கொண்டால் ஒரு காரியமும் அவளைக் கொண்டு செய்ய முடியாது. ஆனால் நீங்கள் சொல்லி நான் தட்டக்கூடாது. அவள் கண் இழந்தது மட்டுமல்ல; செவிடாகப் போனாலும், வாயிழந்து ஊமையாகப் போனாலும் நான் அவளை மணந்துகொள்ளத் தயார். அவளை என் உயிர் உள்ளவரை, இறுதிவரை காப்பது உறுதி" என்றான்.

சுந்தரம் பிள்ளை உள்ளம் மகிழ்ச்சி யடைந்தது. சுருக்கமாகத் திருமணத்தைச் செய்தார்.

இந்தளத்தைக் கரம் பற்றினான் அளகேசன், அவனுடைய மனதில் ஒரு பெரிய நடுக்கம். கண்ணற்றவளுடன் எப்படி வாழ்வது? என்ற ஏக்கம்.

திருவருள் விட்டபடி நடக்கட்டும் என்று மனதைத் திடப் படுத்திக் கொண்டான்.

இந்தளத்துக்கு நேர்ந்த இந்த இடரைக் கண்டு எல்லோரும் பச்சாதாபப்பட்டார்கள். உள்ளம் நொந்து பரிந்துரை பகர்ந்தார்கள்.

ஒரு மாதம் பொறுத்து சாந்திமுகூர்த்தம் நடந்தது. தனிமையான அறையில் பஞ்சணையில் அமர்ந்தான் அளகேசன். அழகு நிறைந்த மனைவியின் கரத்தைப் பற்றி தன் அருகில் அமர்த்தினான்.

மெல்ல இனிய குரலில் "இந்தளம் உனக்கு எப்படிக் கண் போய் விட்டது. என்னைப் பார்த்து அன்பு நகை செய்தாயே? இன்ப வலை வீசினையே? இப்போது என் முகம் உனக்குத் தெரிகின்றதா?" என்று தழுதழுத்த குரலில் கேட்டான்.

"அத்தான்! கவலைப்படாதீர்கள். உங்கள் முகம் எனக்குத் தெரிகின்றது."

"இதோ பார், நான் எத்தனை விரல் காட்டுகின்றேன்?"

"அத்தான் ஒரு விரலைக் காட்டுகின்றீர்கள்; நாம் இருவரும் ஒன்று என்பது பொருள்"

"இப்போது எத்தனை விரல்?"

"மூன்று விரல்கள்! அறம் பொருள் இன்பம் இந்த மூன்றையும் கடைப்பிடிக்க வேணும்."

"என் முகத்தில் என்ன திலகம் அணிந்திருக்கின்றேன்?"

"அத்தான்! உங்கள் முகத்தில் கஸ்தூரிமஞ்சள் குங்குமப்பொட்டு இருக்கின்றது."

"பெண்மணி! உனக்குக் கண் தெரிகின்றதா?"

"ஆம் அத்தான்! நன்ருகத் தெரிகின்றது."

"இப்போதுதான் தெரிகின்றதா? திடீரென்று எப்படிப் பார்வை ஏற்பட்டது?"

"அத்தான்! தங்களைக் கண்டது முதல் எனக்கு உங்கள் மீது அளவற்ற பாசமும் நேசமும் உண்டாயின. முடிவு செய்த திருமணத்தை அபலையாகிய நான் எப்படித் தடை செய்ய முடியும். அதற்காக நான் வழிபடுகின்ற முருகன் எனக்கு இந்த யுக்தியைத் தந்தான். கண் போய்விட்டது என்று நடித்தேன். பனி விலகியது. தாங்கள் என் வாழ்வுக்குக் காலைக் கதிராக வந்தீர்கள்" என்று கணவனைத் தழுவிக் கொண்டாள்.

அடுத்த நாள் இந்தளம் தாய் தந்தையரைப் பணிந்தாள். "அம்மா! அப்பா! அவர் இரவு மந்திர ஜெபம் செய்து எனக்குப் பார்வையைக் கொடுத்து என் சோர்வை நீக்கிவிட்டார்" என்ருள்.

இதனைக் கேட்டு, சுந்தரம் பிள்ளையும் மங்களத்தம்மாளும் உள்ளம் உவந்தார்கள்.

அளகேசன் சிறு உணவுச்சாலை தொடங்கினுன். இந்தளம் சுவையான பலகாரங்களை அமுதம்போல் சமைத்துத் தந்தாள். எங்கும் இந்த உணவுச்சாலையைப் பற்றியே பேச்சு. உணவுச்சாலை வரவர வளர்ச்சி யடைந்தது. பலர் அதில் அலுவல் பார்த்தார்கள். மாதம் பதினுயிரம் ரூபாய் லாபம் வந்தது.

அடையாற்றில் பெரிய மாளிகை வாங்கி அதில் இந்தளம் தன் கணவனுடன் வாழ்ந்தாள். கார் முதலிய சாதனங்கள் பெருகின.

செங்கல்வராயன் I. A. S. திருமணமான மனைவியை அடித்து விரட்டிவிட்டு ஒரு கிறிஸ்தவப் பெண்ணுடன் வாழ்கின்ருன் என்ற செய்தியை யறிந்து சுந்தரம் பிள்ளை திடுக்கிட்டார். ஆ! நம் புதல்வியை மணந்திருந்தாலும் நம் பெண்ணுக்கும் வாழ்க்கை கெட்டிருக்குமே? நல்ல காலத்துக்கு இப்படி அது விலகியது என்று எண்ணி மனம் மகிழ்ந்தார்.

இந்தளம் எல்லா வகையான நன்னலங்களுடன் வாழ்ந்தாள். அவள் வீட்டில் தானமும் தருமமும் நடந்து கொண்டே யிருந்தன.

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---